18th February 1959]

SRI K. SATTANATHA KARAYALAR : யாராவது தனி நபர் இந்தத் தொழிலை ஆரம்பிக்க வேண்டுமென்று உதவி கோரியுள்ளார்களா?

THE HON. SRI R. VENKATARAMAN : "லைன் பிரான்ட் அம்ப்ரலா மான்யுபாக்சரிங் கம்பெனி", மதுரை இதை ஆரம்பிப்பதற்கு யோசனை செய்துக்கொண்டிருக்கிறார்கள்.

*Hurricane Lantern Factory at Palani*

*388. *Q.*—SRI P. G. MANICKAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) பழனி அரிக்கன் லைட் தொழிற்சாலையில் இதுவரை எத்தனை அரிக்கன் லைட்டுகள் உற்பத்தி செய்யப்பட்டன ?

(ஆ) உற்பத்தி செய்யப்பட்ட அரிக்கன் லைட்டுகள் யார் யார் மூலம் விற்பனை செய்யப்படுகின்றன?

(இ) இரண்டாவது ஐந்தாண்டு திட்டகாலத்திலே எந்தெந்த இடங்களிலே அரிக்கன் லைட்டுகள் உற்பத்தி தொழிற்சாலைகள் நிறுவப்படும் ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) The Production-*cum*-Service Centre for the manufacture of Hurricane lanterns at Palni has not yet commenced production.

(*b*) The question does not arise.

(*c*) The Government do not propose to start any other Centre for the manufacture of Hurricane lanterns under the Second Five-Year Plan.

SRI K. SATTANATHA KARAYALAR : இந்த அரிகேன் லைட் செய்யும் தொழிற்சாலைக்கு வேண்டிய மெஷின்கள் வந்து விட்டனவா? வரவில்லை என்றால் எப்பொழுது வந்து சேரும்?

THE HON. SRI R. VENKATARAMAN: மெஷின்கள் எல்லாம் வந்து விட்டன. இந்த மாதக் கடைசியிலாவது அல்லது அடுத்த மாதத்திலாவது ஆரம்பிக்கப்படும்.

SRI P. G. MANICKAM : இந்தத் தொழிற்சாலையில் எத்தனை பேருக்குப் பயிற்சி அளிக்க திட்டம் போடப்பட்டிருக்கிறது?

THE HON. SRI R. VENKATARAMAN : இது ட்ரெயினிங் ஸ்கீம். 10 "அப்பரென்டிஸுக்கு" ட்ரெயினிங் கொடுத்துக் கொண்டிருக்கிறோம். இதில் எவ்வளவு பேருக்கு வேலை கிடைக்கும் என்று சொல்ல முடியாது.

SRI A. GOVINDASAMY : இந்தத் தொழிற்சாலை கட்டப்பட்டு யந்திரங்கள் வந்து சேர்ந்தும் வேலை துவங்காததற்குக் காரணம் மின்சாரம் வழங்கப்படாததுதான் என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா?

THE HON. SRI R. VENKATARAMAN : அப்படி ஒன்றும் இல்லை. சாதாரணமாக ஒரு மெஷின் வந்து, கட்டிடம் கட்டி அந்த இடத்திலே மெஷினைப் பொருத்தி வேலை ஆரம்பிப்பதற்குத் தாமதமே தவிர மின்சாரம் வழங்கப்படாததால் மட்டும் அது நின்று விடவில்லை.

*Village chavadies*

*430. *Q.*—SRI P. G. MANICKAM : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

கோயமுத்தூர் ஜில்லாவிலே எத்தனை கிராமச் சாவடிகள் (village chavadies) பழுதடைந்த நிலைமையிலிருக்கின்றன ?

THE HON. SRI V. RAMAIAH : Twenty nine chavadies are in need of repairs.

[18th February 1959

SRI P. G. MANICKAM : சார், இந்தக் கிராமச் சாவடிகளைப் பழுது பார்க்கக்கூடிய நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறதா?

THE HON. SRI V. RAMAIAH : பழுது பார்க்கப்படவேண்டிய சாவடிகள் அப்பேரவைதக்கப்போது கவனிக்கப்பட்டு வருகின்றன.

*All-India tour by farmers*

* 441 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Chief Minister be pleased to state the places visited by the farmers of the State during the recent All-India tour?

THE HON. SRI C. SUBRAMANIAM : A statement [a] showing the list of places visited by the farmers of this State during their recent All-India Tour is placed on the Table of the House.

SRI K. SATTANATHA KARAYALAR : குடியானவர்கள் எத்தனை பேர்கள் சுற்றுப்பிரயாணம் செய்தார்கள். இவர்கள் எப்படி நம் மாகாணத்தில் பொருக்கி எடுக்கப்பட்டார்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : A number of 324 Kisans took part in the tour and it lasted for 50 days. They had to make the tour at their own expenses and I think they made applications and on that basis they were selected.

SRI V. K. KOTHANDARAMAN : இந்தச் சுற்றுப்பிரயாணம் செய்த குழுவில் அரிஜன விவசாயிகள் எத்தனைபேர் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not have that information with me, Sir.

SRI A. GOVINDASAMY : இந்தச் சுற்றுப் பிரயாணம் செய்த விவசாயிகளுக்கு அரசாங்கம் என்னென்ன உதவிகள் செய்திருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : செலவை அவர்களே போட்டுக் கொண்டார்கள். போக வேண்டிய ரயில் ஏற்பாடு செய்வது, போன இடங்களில் தக்க ஏற்பாடு செய்வது, ஆங்காங்கு பார்ப்பதற்கு வசதிகள் செய்து கொடுப்பது ஆகியவைகளை அரசாங்கம் செய்து கொடுத்தது.

SRI K. B. S. MANI : இந்த விவசாயிகள் பட்டியலிலே சுற்றுப் பிரயாணம் செய்தவர்கள் நிலம் வைத்திருக்கக்கூடிய பெரிய நிலக்காரர்களா ? அல்லது வயலில் வேலை செய்கின்ற ஏழை விவசாயிகளா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : எல்லாப் பகுதிகளையும் சேர்ந்தவர்கள் இருந்தார்கள் என்று நினைக்கிறேன்.

*Reserve Police Force for the Southern Zone*

*442 *Q.*—SRI A. VEDARATHNAM and SRI K. SATTANATHA KARAYALAR : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தென் மண்டல ராஜ்யங்களுக்குப் பொதுவான ரிஸெர்வ் போலிஸ் படை அமைக்கும் தீர்மானம் எப்போது அமுலுக்கு வரும் ?

---

[a] Printed as Appendix on page 266 infra.